வரங்களைப் பெற்று ஆயிரத்தெட்டு அண்டங்களையும் நூற்றெட்டுயுகம் ஆண்டவன்; இந்திராதி தேவர்களைச் சிறையிட்டவன்; மிக்க வலிமையுடையவன். சோதித்தல் - வினவுதல்.

பானுப்பகைவன் - பானுகோபன்; இவன் சூரபன்மனுக்குப் பதுமகோமளை யிடத்துப் பிறந்த மூத்த குமாரன்; குழந்தைப் பருவத்தில் தொட்டிலில் கிடக்கும்போது சூரியனுடைய கிரணங்கள் நுழைவாயிலின் வழியாக வந்து உடலின்மேற் பட்டன என்று கோபித்துச் சூரியனைப் பிடித்துவந்து தொட்டிலில் கட்டிவைத்தவன்; அதனல் பானுகோபன் என்னும் பெயர் பெற்றவன்; (பானு - சூரியன். கோபன் - காய்ந்தவன்) மிகுந்த பேராற்றலுடையவன்.

பானுகோபன், அக்கினிமுகன், வச்சிரவாகு, மூவாயிரவர் முதலிய சூரபன்மனின் புதல்வர்களைக் குறிக்கவே, "பானு பகைவன் முதலாய பாலர்" என்ருர் சிங்கமுகன் - ஆயிரஞ் சிங்கத் தலைகளையும் இரண்டாயிரங் கைகளையும் உடைய அசுரன்; இவன், காசியபனுக்கு மாயையிடத்துப் பிறந்த இரண்டாம் புதல்வன்; சூரபன்மன் தம்பி: ஆசுரபுரியைத் தலைநகராகக் கொண்டவன்; தேவர்களுக்குப் பெருந் துன்பம் இழைத்து வந்தவன்; மிக்க வலிமை படைத்தவன்.

சூரபன்மன் கடல் நடுவில் தீயினைப்போன்ற செந்தளிர்களைப் பெற்று, பொன்னிறமான பூங்கொத்துக்களை ஈன்று, மரகதம் போன்ற காய்களைக்கொண்டு, செந்நிற மணிபோன்ற பழங்களைக் காட்டி, கார்மேகம் போன்ற கிளைகளை விட்டுக் கொண்டு பெரிய மாமரமாக நின்ருன் என்பார், "சகமுடுத்த, வாரிதனிற் புதிய

மாவாய்க் கிடந்த" என்றார். இனி, வேர்மேலும், மாவின் மற்றைய பகுதிகள் கீழுமாகச் சூரபன்மன் நின்றான் என்பது ஒரு சாரார் கொள்கை. இக்கருத்தையே ஆசிரியர் புதுமையாகக் கொண்டு, "புதிய மாவாய்க் கிடந்த" என்றோதினர் போலும் எனக் கொள்ளினும் பொருந்தும்: "அகல் திரைப் பரப்பிற் சடையனைசந் தலையாது, கீழிணர் நின்ற மேற்பகை மாவின், ஒருடல் இரண்டு கூறுபட விடுத்த........ அாத்தநெடு வேலோய்", "மணிதிரைக் கடலுள் மாவெனக் கவிழ்ந்த, களவுடல் பிளந்த வொளிகெழு திருவேல்", "பெருங்கள இணர்தங் தவைகீழ்க் குலவிய, விடமாக் கொன்ற நெடுவேற் குளவன்" (கல்லாடம்).

—

முருகக் கடவுளின் வேலாயுதம் சூரபன்மனுடைய உடலை இருபிளவாக்கிற்று. அவ்விருபிளவும் கோழியும் மயிலுமாக உருக்கொண்டு ஆரவாரித்து வர, அதனைக்கண்ட முருகக் கடவுள் மயிலைத் தனக்கு ஊர்தியாக ஆக்கிக் கொண்டார் என்பதைக் கந்த புராணம்-சூரபன்மன் வதைப் படலம் 492, 499-ம் செய்யுட்களால் அறியலாம்.

இளையோன் -(என்றும் அழியாத) இளமையையுடையவன்: 'என்றும் அழியாத இளமைக்கார' (திருப்புகழ்.) பகைவனாகிய சூரபன்மனே சேவலுருவம் எடுத்து வந்தமையின், 'சேவற் பகை' என்றார். பிற கொடிகளெல்லாம் தனக்குத் தாழ்ந்து நிற்ப, அவற்றிற்கெல்லாம் மேலாக உயர்த்திய கொடி என்பார், தனித்துயர்ந்த என்றார். முருகக்கடவுள், தன் வேலால் பிளவுபட்ட சூரபன்மனின் உடற்கூற்றில் ஒன்றாகிய சேவலைத் தனக்குக் கொடியாகக் கொண்டருளினர் என்பதைக் கந்த புராணம் - சூரபன்மன் வதைப்படலம் 492, 498-ம் செய்யுட்களால் உணரலாம்.

76-ம் கண்ணியில் 'விண்ணோர் முறைக்கு இரங்கி' எனக் கூறியதற்கேற்ப, ஈண்டு, 'மூவர் குறை முடித்து' எனக்கூறிய நயம் அறியத்தக்கது. மூவர் குறை - மும் மூர்த்திகளுக்குச் சூரபன்மனுல் ஏற்பட்ட குறைவுகள்.

இலக்கணக் குறிப்பு: அனைத்தும், உம்: முற்றும்மை. விடுக்குதி: முன்னிலை ஏவல் ஒருமை வினைமுற்று. புகன்றிலை யால், ஆல்: அசை. மயேந்திரம்- (மஹேந்திரம்). சிட்டி- (ஸ்ருஷ்டி); தற்பவம். எங்ஙன்: வினு. மு(ன்)னம்: இடைக் குறை.போற்றிசைப்ப: ஒருசொல். தெள்ளு, உ: சாரியை. கொணர்ந்து: வினையெச்சம்; கொணு: பகுதி. கருணை வெள்ளம்: உருவகம். கோன், ன்: சாரியை. தாரகனும் தடங்கிரியும். உம்: எண்ணும்மை. கிடாயதனை, கிடாய்+அது+அன்+ஐ. அது: பகுதிப்பொருள் விகுதி. அன்: சாரியை. ஐ: இரண்டனுருபு. வீற்றிருந்து, (வீறு+இருந்து) வீறு, ஒற்று இரட்டித்து வீற்று என ஆயிற்று. கய+இந்திரன்=கயேந்திரன். சய+இந்திரன் சயேந்திரன்: குணசந்தி. சோதித்தல் (வினவுதல்): மலை நாட்டு வழக்கு. வருக+என்று=வருகென்று: அகரம், தொகுத்தல். பானுப் பகைவன்: வேற்றுமைத் தொகை. விட்டு என்னும் வினையெச்சம் வணங்காமையால் என்பதைக் கொண்டது. விண்ணம், உடலம், அம்: சாரியை. கீண்ட: பெயரெச்சம்; கீள்: பகுதி. திறல்: திறம் என்பதன் ஈற்றுப் போலி. மூவர்: தொகைக் குறிப்பு. சேவற்பகை: இருபெயரொட்டுப் பண்புத் தொகை. நான்கு+படை =நாற் படை.

## முருகக் கடவுள் தெய்வயானை யம்மையாரையும் வள்ளி நாச்சியாரையும் திருமணம் புரிதல்

—மறைமுடிவாம்

105. சைவக் கொழுந்தே! தவக்கடலே! வானுதவும்
தெய்வக் களிற்றைமணஞ் செய்தோனே!—பொய்விரவு

106. காம முனிந்த கலைமுனிவன் கண்ணருளால்
வாமமட மானின் வயிற்றுதித்துப்—பூமருவு

107. கானக் குறவர் களிகூரப் பூங்குயில்போல்
ஏனற் புனங்காத்(து) இனிதிருந்து—மேன்மைபெறத்

108. தெள்ளித் தினைமாவுந் தேனும் பரிந்தளித்த
வள்ளிக் கொடியை மணந்தோனே!

இ-ள்: மறை முடிவு ஆம் - வேதங்களின் முடிவாக உள்ள (உண்மைப் பொருளைத் தெரிவிக்கும்), சைவக் கொழுந்தே - சைவசமயத்தின் இளஞ்சோதியே! தவக் கடலே - (மக்கள் செய்யும்) தவமாகிய ஆறுகளெல்லாம் சென்றடைதற்கு இடமாகிய கடலாயுள்ளவனே! வான் உதவும் - வானுலகத்திற்குத் தலைவனுகிய இந்திரன் மகிழ்ந் தளித்த, தெய்வக் களிற்றை - தெய்வயானை யம்மையாரை, மணம் செய்தோனே - திருமணஞ்செய்து கொண்டவனே! பொய் விரவு காமம் முனிந்த-நிலையாமையையுடைய (உலக) இச்சையைத் துறந்த, கலை முனிவன் - கலைகளை உணர்ந்த சிவமுனிவனின், கண் அருளால் - பார்வையினுல் (துய்த்த) கருணையினுல், வாமம் மடம் மானின் - அழகிய இளம் பருவத்தையுடைய பெண்மானின், வயிற்று உதித்து - வயிற்றில் (கருவுற்றுப்) பிறந்து, பூ மருவு கானம் குறவர் - பூக்கள் பொருந்திய கானகத்தில் வாழும் குறவர்கள்,

களிகூர களிப்படையுமாறு, பூங்குயில்போல் - அழகிய குயிலைப்போல், ஏனல் புனம் இனிது காத்து இருந்து-தினைக் கொல்லையை இனிதாகக் காவல்புரிந்து, மேன்மை பெற - மேலான நிலையினையடைய, தெள்ளி தினை மாவும்-தெள்ளிய தினை மாவையும், தேனும் - தேனையும் (கலந்து), பரிந்து அளித்த - அன்போடளித்த, வள்ளிக் கொடியை-பூங்கொடி போன்ற வள்ளி நாச்சியாரை, மணந்தோனே-திருமணஞ் செய்து கொண்டவனே! எ - று.

விளக்கவுரை: சைவ சித்தாந்தம் தனிப்பட்ட பெருமையினையுடையது என்பார், மறை முடிவாம் சைவம் என்றார்: "வேதாந்தத்தீதில் பொருள்கொண்டுரைக்கும்நூல் சைவம்" (சிவஞான சித்தியார்.) வானுதவும் தெய்வக்களிறு - தெய்வயானை யம்மையார்; இங்கே, களிறு என்பது யானை என்னும் பொருளில் வந்தது. திருமாலின் மூத்த புதல்வியான அமுதவல்லி, சண்முகக் கடவுளைத் திருமணஞ் செய்துகொள்ளும் பொருட்டு, இந்திரன் எதிரில் குழந்தையாகச்சென்று, "சொர்க்காதிபதியே! நான் உன்னுடன் பிறந்த உபேந்திரனுக்குப் புதல்வி; ஆகலால், தந்தையே! என்னைப் பாதுகாக்கக்கடவை" என்று கூற, இந்திரன் ஐராவதமென்னும் வெள்ளை யானையை அழைத்து, "நமது புதல்வியாகிய இக்குழந்தையை அன்புடன் வளர்த்துவரக் கடவாய்" என்று சொல்ல, ஐராவதம் அக் குழந்தையை மனோவதி நகரத்திற்கு எடுத்துச் சென்று பாதுகாத்து வந்தது. அதுமுதல் அப்பெண் தெய்வயானை என்னும் பெயரைப் பெற்றனள். பின்னர், இந்திரன் தெய்வயானையை முருகக் கடவுளுக்கு அளிக்க, அவர் திருமணஞ் செய்து கொண்டார் என்பார், "வானுதவும் தெய்வக் களிற்றை மணஞ் செய்தோனே" என்றார்.

கலைமுனிவன் - கலைகளையுணர்ந்த முனிவன்; சிவ முனிவன். மடமான் என்பதற்கேற்ப கலையாகிய முனிவன என்றும் ஒருபொருள் தொனித்தல் அறிக. (கலை—ஆண்மான்) கண்ணால் துய்த்தல் தேவர்களுக்கு இயல்பு ஆகலின் தேவரை ஒத்த சிவமுனிவரும் அங்ஙனம் செய்தார். ஆகவே, சிவமுனிவன் பார்வையினால் துய்த்த கருணையினால் மடமானின் வயிற்றில் வள்ளி நாச்சியார் உதித்தார் என்பார், 'கலைமுனிவன் கண்ணருளால் வாமமடமானின் வயிற்றுதித்து' என்றார்.

காக்கையால் வளர்க்கப்பெறும் குயில், பிறகு தன் இனத்தைச் சேர்வது போல, வள்ளியம்மையாரும் குறவர்களால் வளர்க்கப்பெற்றுப் பின்பு தமக்குரிய இடத்தைச் சேர்ந்தார் என்ற கருத்தை உள்ளடக்கிப், "பூங்குயில்போல் ஏனற் புனங்காத் தினிதிருந்து" என்றார். "கானமென் குயில்போல் வந்துமீள வுந்தன் காவலர் குலத்திடைக் கலந்தாள்" (வில்லிபாரதம்) பூங்குயில்போல் ஏனல் புனங் காத்து இனிது இருந்து - அழகிய குயிலின் ஒலிபோன்ற குரலினால் (தினைப்பயிரைத் தின்னவரும பறவைகளை ஓட்டித்) தினைப்புனத்தை நன்றாகக் காத்திருந்து என்று பொருள் கூறினுமாம்.

இலக்கணக் குறிப்பு:— வான் - ஆகுபெயர். உதவும் - பெயரெச்சம். மடமான்: பண்புத் தொகை. கானக்குறவர்: வேற்றுமைத் தொகை. கவி கூர, கூர் உரிச்சொல். தினை மாவும் தேனும், உம்: எண்ணும்மை. தவக்கடல்: உருவகம். கொழுந்தே, கடலே, செய்தோனே, மணந்தோனே: விளிகள்.

## முருகக்கடவுள் அன்பர் மனத்திலும், செந்திப்பதியிலும் எழுந்தருளியிருத்தல்

—உள்ளமுவந்(து)

109. ஆறு திருப்பதிகண்(டு) ஆறெழுத்தும் அன்பினுடன்
கூறுமவர் சிந்தைகுடி கொண்டோனே !—நாறுமலர்க்

110. கந்திப் பொதும்பர்எழு காரலைக்குஞ் சீரலைவாய்ச்
செந்திப் பதிபுரக்குஞ் செவ்வேளே !

இ-ள்: *உள்ளம் உவந்து - மனமகிழ்ந்து, ஆறு திருப்பதி கண்டு - (தெய்வத் தன்மை வாய்ந்த) ஆறு திருப்பதிகளையும் தரிசித்து, ஆறு எழுத்தும் - ஆறெழுத்தையும், அன்பினுடன் - அன்போடு, கூறும் அவர் - ஓதுகின்றவர்களின், சிந்தை குடிகொண்டோனே-உள்ளத்தை யிருப்பிடமாகக் கொண்டவனே! நாறு மலர் கந்திப் பொதும்பர் - மணம்வீசுகின்ற மலர்களையுடைய கமுகஞ்சோலை, எழுகார் -எழுகின்ற மேகத்தை, அலைக்கும் - அலைக்கின்ற, சீர் அலைவாய் - சிறப்புடைய கடற்கரை யிடத்தேயுள்ள, செந்திப் பதி புரக்கும் - திருச்செந்தூரைப் பாதுகாக்கின்ற, செவ்வேளே - முருகக் கடவுளே !*

விளக்கவுரை: *உள்ளம் - உள்ளுதற்குக் கருவியாய் இருப்பது; மனம். ஆறு திருப்பதி - திருப்பரங்குன்றம், திருச்செந்தூர், திருவாவினன்குடி, திருவேரகம், குன்றுதோருடல், பழமுதிர் சோலை என்பன; இவற்றை ஆறு படை வீடு எனக் கூறுவர். ஆறு எழுத்து - 'சரவணபவ' என்னும் மந்திரம். நச்சினார்க்கினியர் திருமுருகாற்றுப் படையில் 'ஆறெழுத்து' என்பதற்கு 'நமோ குமாராய' என்று பொருள் கூறியுள்ளார்.*

கந்தி - கமுகு: பாக்கு மரம். பொதும்பர் - சோலை. எழு கார்-எழு மேகங்களுமாம்; சம்வர்த்தம், ஆவர்த்தம், புட்கலாவர்த்தம், சங்காரித்தம், துரோணம், காளமுகி, நீலவருணம் என்பன. மேகமண்டலம் வரையும் கமுகஞ் சோலைகள் உயர்ந்திருந்தன என்பார், 'கந்திப் பொதும்பர் எழுகார் அலைக்கும்' என்றார். சீரலைவாய்ச் செந்திப்பதி—திருச்சீரலைவாயாகிய திருச்செந்தூர் எனினுமாம். 'ஜயந்தி' என்பது 'செந்தி' என வந்தது என்பர். 'செந்திற்பதி' என்றும் பாடம். செவ்வேள்—செந்நிறமுடைய முருகவேள். வேள் - அழகு.

இலக்கணக் குறிப்பு: உவந்து: வினையெச்சம். எழு கார்: வினைத்தொகை. அலைக்கும்: பெயரெச்சம். பொதும்பர்: ஈற்றுப் போலி. செம்மை + வேள் = செவ்வேள்.

## அன்பரின் வேண்டுகோள்

— சந்ததமும்

111. பல்கோடி சன்மப் பகையும் அவமிருத்தும்
பல்கோடி விக்கினமும் பல்பிணியும் — பல்கோடி

112. பாதகமுஞ் செய்வினையும் பாம்பும் பசாசுமடற்
பூதமுந்தீ நீரும் பொருபடையும் — தீதகலா

113. வெவ்விடமுந் துட்ட மிருகமுத லாமெவையும்
எவ்விடம் வந்(து) எம்மை எதிர்ந்தாலும் - அவ்விடத்திற்

114. பச்சைமயில் வாகனமும் பன்னிரண்டு திண்டோளும்
அச்சம் அகற்றும் அயில்வேலும் — கச்சைத்

115. திருவரையும் சீறடியுஞ் செங்கையும் ஈரா(று)
அருள் விழியும் மாமுகங்கள் ஆறும் — விரிகிரணம்

116. சிந்தப் புனைந்த திருமுடிகள் ஓராறும்
எந்தத் திசையும் எதிர்தோன்ற — வந்திடுக்கண்

117. எல்லாம் பொடிபடுத்தி எவ்வரமுந் தந்துபுகுந்(து)
உல்லாச மாக உளத்திருந்து — பல்விதமாம்

118 ஆசுமுதல் நாற்கவியும் அட்டாவ தானமுஞ்சீர்ப்
பேசுமியல் பல்காப் பியத்தொகையும் — ஓசை

119. எழுத்துமுத லாம்ஐந் திலக்கணமுந் தோய்ந்து
பழுத்த தமிழ்ப்புலமை பாலித்(து) — ஒழுக்கமுடன்

120. இம்மைப் பிறப்பில் இருவா தனை அகற்றி
மும்மைப் பெருமலங்கள்மோசித்துத் — தம்மைவிடுத்(து)

121. ஆயும் பழைய அடியா ருடன்கூட்டித்
தோயும் பரபோகந் துய்ப்பித்துச் — சேய

122. கடியேற்கும் பூங்கமலக் கால்காட்டி ஆட்கொண்(டு)
அடியேற்கு முன்னின்(று) அருள்.

இ-ள்: *சந்ததமும் - எப்பொழுதும், பல்கோடி சன்ம பகையும் - எண்ணிறந்த பிறவிகளில் செய்த தீவினைகளும், அவமிருத்தும்- அகால மரணமும், பல் கோடி விக்கினமும் - எண்ணிறந்த இடையூறுகளும், பல் பிணியும் - பலவகைப் பட்ட நோய்களும், பல்கோடி பாதகமும் - எண்ணற்ற பாதகங்களும், செய்வினையும் - (பிறரால்) செய்யப்படுகின்ற சூனியம் முதலியனவும், பாம்பும் - பாம்புகளும், பசாசும் - பேய்களும், அடல் பூதமும் - வலிமையுடைய பூதங்களும், தீ நீரும் - தீயும் நீரும், பொரு படையும் - தாக்கும் ஆயுதங் களும், தீது அகலா வெவ்விடமும் - தீக்குணத்தை நீக்காத கொடிய விடமும், துட்ட மிருகம் முதலாம் எவையும் - கொடிய விலங்குகள் முதலாகிய யாவும், எவ்விடம் வந்து - எவ்விடத்தில் வந்து, எம்மை எதிர்ந்தாலும் - எம்மைத்*

தாக்கினும், அவ்விடத்தில் - அந்த இடத்தில், பச்சை மயில் வாகனமும் - பசுமை நிறத்தையுடைய மயில் வாகனமும், திண் - வலிமையுள்ள, பன்னிரண்டு தோளும் - பன்னிரண்டு தோள்களும், அச்சம் அகற்றும் - (தன்னை அன்போடு நினைக்கின்றவர்களின்) அச்சத்தைப் போக்கு கின்ற, அயில் வேலும் - கூர்மையையுடைய வேலாயுதமும், கச்சை திரு அரையும் - கச்சையணிந்த அழகிய இடையும், சிறடியும் - சிறிய திருப்பாதங்களும், செம் கையும் - சிவந்த (பன்னிரண்டு) கைகளும், அருள் - கருணையைப் பொழி கின்ற, ஈராறு விழியும் - பன்னிரண்டு (திருக்) கண்களும், மா முகங்கள் ஆறும்-சிறந்த திருமுகங்கள் ஆறும், விரி கிரணம்-பரவுகின்ற கிரணங்களை, சிந்த - வீசுமாறு, புனைந்த- அணிந்த, திருமுடிகள் ஓர் ஆறும் - திருமுடிகள் ஆறும், எந்த திசையும். எதிர்தோன்ற வந்து - எந்தத் திக்குகளில் நோக்கினும் எதிரே காணுமாறு வந்தருளி, இடுக்கண் எல்லாம்-துன்பங்களை யெல்லாம், பொடி படுத்தி-தூளாக்கி யொழித்து, எவ்வரமும் தந்து- (எனக்கு வேண்டும்) எல்லா வரங்களையும் தந்தருளி, உளத்து புகுந்து உல்லாசமாக இருந்து - (எனது) மனத்துட் புகுந்து மகிழ்ச்சியாக வீற்றிருந்து, பல் விதம் ஆம் - பலவகையாகப் பாடப்படு கின்ற, ஆசு முதல் நால் கவியும் - ஆசு கவி முதலாகிய நாற் கவிகளும், அட்டாவதானமும்-ஒரே காலத்தில் எட்டு வகை வினாக்களுக்கு விடை அளிக்கும் கவன சக்தியும், சீர்-சிறப் போடு, பேசும் இயல் - பேசப்படுகின்ற இலக்கண அமைதி யுடைய, பல் காப்பியத் தொகையும் - பல காவியங்களின் தொகுதியும், ஓசை-ஒலியையுடைய, எழுத்து முதலாம் ஐந்து இலக்கணமும் - எழுத்து முதலாகச் சொல்லப்படுகின்ற ஐந்து இலக்கணங்களிலும், தோய்ந்து - படிந்து, பழுத்த தமிழ்ப் புலமை-முதிர்ந்த தமிழ்ப் புலமையும், ஒழுக்கமுடன்

-நல்லொழுக்கமும், பாலித்து-தந்தருளி, இம்மை பிறப்பில்-இப்பிறப்பில் (உண்டாகும்), இரு வாதனை அகற்றி - அகப்பற்றும் புறப்பற்றுமாகிய இருவகைப் பற்றுக்களையும் போக்கி, பெரு - பெரிதாகிய, மும்மை மலங்கள் - ஆணவம் மாயை கன்ம மென்னும் மும்மலங்களையும், மோசித்து-நீக்கி தம்மை விடுத்து-(தமது) ஆன்ம போதத்தை ஒழித்து, ஆயும்-(அருள் வழி நின்று இறைவன் உண்மையை) ஆராய்கின்ற, பழைய அடியாருடன் கூட்டி - பழைய அடியார்களின் கூட்டத்தில் (என்னையும்) சேர்த்து, தோயும் பர போகம் துய்ப்பித்து - (அவ்வடியார்கள்) அனுபவிக்கின்ற பேரின்பத்தை (நானும்) அனுபவிக்கச் செய்து, சேய-சிவந்த, கடி ஏற்கும் - மணம் பொருந்திய, பூங்கமலம் கால் காட்டி - அழகிய தாமரை மலர்போன்ற திருவடி (தரிசனம்) தந்து, ஆட்கொண்டு-ஆட்கொண்டருளி, அடியேற்கு முன்நின்று அருள்-அடியேனுக்கு (எப்பொழுதும்) முன் நின்று அருள் செய்வாயாக எ - று.

விளக்கவுரை: பல்கோடி - எண்ணிறந்த என்னும் பொருள் குறிக்குஞ் சொல். பாதகம் - மகாபாதகம், அதிபாதகம், உபபாதகம் முதலியன. செய்வினை - ஏவலுமாம். எம்மை என்றது அடியார்களையும் உளப்படுத்தி. இடுக்கண்-துன்பம். உல்லாசம்-மகிழ்ச்சி. ஆசுமுதல் நாற்கவி-ஆசுகவி மதுரகவி, சித்திரகவி, வித்தாரகவி என்னும் நால்வகையான கவி. ஆசுகவி-ஒருவன் கருத்துக்கு ஏற்ப உடனே செய்யுள் பாடுதல். மதுரகவி-இனிமை மிக்க கவிபாடுதல். சித்திரகவி-சித்திரத்தில் அடைத்தற்குரிய செய்யுள் பாடுதல். வித்தாரகவி-விரிந்த காவியம் பாடுதல். "நாற்கவியும் பாடும் பணியிற் பணித்தருள்வாய்" என்பது சகல கலாவல்லி மாலை.

அவதானம் - ஒரே சமயத்தில் பலவகைத் துறையில் கருத்தைச் செலுத்துதல்; ஞாபகசக்தி. அட்டாவதானம் என்றதனால் தசாவதானமும், சோடசாவதானமும் கொள்க. இயல் - இலக்கணம். எழுத்து முதலாம் ஐந்து இலக்கணம் - எழுத்து, சொல், பொருள், யாப்பு, அணி என்னும் ஐந்திலக்கணம். புலம் - அறிவு, புலமை-அறிவாந் தன்மை. ஒழுக்கமில்லாவிடத்துக் கல்வியாற் பயனின்மை யின், 'ஒழுக்கமுடன் பாலித்து' என்றார். ஒழுக்கமில்லாத கல்வி யாதும் பயனில்லை: "கற்க கசடறக் கற்பவை கற்ற பின், நிற்க அதற்குத் தக" (திருக்குறள்.)

இருவாசனை - அகப்பற்று, புறப்பற்று என்னும் இரு வகைப் பற்றுக்கள். அகப்பற்று-யான் என்பது. புறப் பற்று - எனது என்பது. ஆன்ம அறிவைச் சிறுமைப்படுத் தலின், "பெருமலங்கள்" என்றார். பழைய அடியார் - தொன்று தொட்டு அடிமைத் திறம் பூண்டு நிற்போர். சேய - நண்ணுதற்கரிய எனினுமாம். சேய்மை - தூரம். கடி - மணம்.

இலக்கணக் குறிப்பு: கோடி, மும்மை: எண்ணுப் பெயர்கள். செய்வினை, பொருபடை, விரிகிரணம்-வினைத் தொகைகள். எந்த; எகரவினா திரிந்து வந்தது; உலக வழக்குச்சொல். பல + கோடி = பல்கோடி. பல + பிணி = பல்பிணி. சிறுமை + அடி = சீறடி. பல + விதம் = பல் விதம். நான்கு + கவி = நாற்கவி.

திருச்செந்தூர்க்
கந்தர் கலிவெண்பா
மூலமும் உரையும்
முற்றிற்று.

உ

செந்திலாண்டவன் துணை

திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்துத் தலைவராக எழுந்தருளியிருக்கும்

## ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி

## அருள்நந்தித் தம்பிரான் சுவாமிகள் அவர்கள்

தமிழ்க்கல்வி, சைவசித்தாந்தம், தேவாரத் திருமுறைகள், இசைத் தமிழ், அன்னதானம், வைத்தியம் இவற்றின் அபிவிருத்திக்காகவும் பொதுமக்களின் அனுகூலத்துக்காகவும் மனமுவந்து அமைத்திருக்கும் பேரறக் கட்டளைகள்.

| தொடர் எண் | தரும விபரம் | | மூலதனம் ரூபாய் |
|---|---|---|---|
| 1 | *சிவஞான சித்தியார் உபந்நியாசக் கட்டளை அண்ணாமலைப் பல்கலைக் கழகம்* | ... | *15,000* |
| 2 | *கொட்டையூரில் நடுத்தரக் கல்விச்சாலை ஏற்படுத்த* | ... | *11,500* |
| 3 | *திருவாங்கூர் மகராஜா தேவாரப் பரிசு* | ... | *5,000* |
| 4 | *சேரமான்பெருமாள் தேவாரப் பரிசு, கொச்சி* | ... | *5,000* |
| 5 | *மூவர் தேவாரப் பரிசு சீகாழி, திருவாரூர், திருவையாறு, திருப்பனந்தாள், ஆடுதுறை* | ... | *10,000* |
| 6 | *ஸ்ரீ காசிப் பல்கலைக் கழகத்தில் சைவசித்தாந்த போதகாசிரியர் நியமிக்க (62 பார்க்க)* | ... | *60,000* |
| 7 | *அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் சைவ சித்தாந்த உபகாரச் சம்பளம் அளிக்க* | ... | *30,000* |
| 8 | *திருப்பனந்தாளில் தமிழ்க் கல்லூரி நிறுவ நிலைப்பெறுமானம்* | ... | *1,50,000* |
| 9 | *இசைத் தமிழ்க் கல்விக்கு நிலைப்பெறுமானம்* | ... | *1,00,000* |
| 10 | *திருப்பனந்தாளில் கால்நடை வைத்தியசாலை ஏற்படுத்தவும், குடந்தைக் கல்லூரியில் உபகாரச் சம்பளமளிக்கவும் நிலைப்பெறுமானம்* | ... | *20,000* |

| தொடர் எண் | தரும விபரம் | மூலதனம் ரூபாய் |
|---|---|---|
| 11 | ஸ்ரீ காசியில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவுநாள் அன்னதானம் (வைகாசி அமர பக்ஷம் திருதியை) ... | 10,000 |
| 12 | இராமேசுவரத்தில் ஸ்ரீ குமரகுருபரசுவாமிகள் நினைவுநாள் அன்னதானம் (வைகாசி அமர பக்ஷம் திருதியை) ... | 10,000 |
| 13 | திருநள்ளாற்றில் ஆவணிமூல அன்னதானம் ... | 3,000 |
| 14 | ஸ்ரீ காசியில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவு மார்கழி மாத அன்னதானம் ... | 17,000 |
| 15 | திருப்பனந்தாள் செந்தமிழ்க் கல்லூரி மாணவர் உணவு நிதி நிலப்பெறுமானம் ... | 1,00,000 |
| 16 | திருப்பனந்தாளில் ஜன வைத்தியசாலை நிறுவ நிலப்பெறுமானம் ... | 66,000 |
| 17 | திருப்பனந்தாள் மண்ணியாற்றங்கரையில் கேதார கட்டம் ... | 2,900 |
| 18 | திருப்பனந்தாள் மண்ணியாற்றங்கரையில் அரிச்சந்திர கட்டம் ... | 3,300 |
| 19 | கும்பகோணத்தில் மணிக்கூண்டு ... | 25,000 |
| 20 | தஞ்சையில் காசநோய் வைத்தியசாலை ... | 29,500 |
| 21 | ஸ்ரீவைகுண்டம் ஸ்ரீ குமரகுருபரர் நினைவுநாள் அன்னதானம் (வைகாசி அமரபக்ஷம் திருதியை)... | 9,000 |
| 22 | மைசூர் மகாராஜா தேவாரப் பரிசு ... | 5,000 |
| 23 | தருமை ஸ்ரீ குருஞானசம்பந்த சுவாமிகள் நினைவுத் தேவாரப் பரிசு, மாயூரம் ... | 5,000 |
| 24 | சென்னை விவேகானந்தா கல்லூரியில் ராஜாஜி சைவ சித்தாந்தக் கட்டளை ... | 10,000 |
| 25 | ஸ்ரீ காசிப் பல்கலைக் கழகத்தில் சர் எஸ். ராதா கிருஷ்ணன் சைவ சித்தாந்தக் கட்டளை ... | 20,000 |

| தொடர் எண் | தரும விபரம் | மூலதனம் ரூபாய் |
|---|---|---|
| 26 | ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவுத் தேவாரப் பரிசு, ஸ்ரீவைகுண்டம் ... | 5,000 |
| 27 | மதுரைத் திருமலை நாயக்கர் தேவாரப் பரிசு ... | 10,000 |
| 28 | ஸ்ரீ செந்திலாண்டவன் அன்னதானம் ஸ்ரீவைகுண்டம், திருச்செந்தூர், திருநெல்வேலி மாணவிகளுக்கு நிலப்பெறுமானம் ... | 1,00,000 |
| 29 | ஸ்ரீ காசியில் மகாத்மா காந்தியடிகள் நினைவு அன்னதானம் (ஜனவரித் திங்கள் 30-ம்நாள்)... | 2,000 |
| 30 | ஸ்ரீ செந்திலாண்டவன் அன்னதானம் ஸ்ரீ காசி, மதுரை, குடந்தை மாணவிகட்கு நிலப்பெறுமானம் ... | 1,50,000 |
| 31 | டாக்டர் சுவாமிநாத ஐயர் நினைவுத் திருக்குறட் பரிசு, சென்னை ... | 3,500 |
| 32 | குடந்தையில் காந்தியடிகள் பசுப் பரிசு ... | 1,000 |
| 33 | காந்தியடிகள் நினைவு அரியநாயகிபுரத்தில் ஹரிஜன மாணவ உபகார நிதி ... | 3,000 |
| 34 | ஸ்ரீவைகுண்டத்தில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நித்திய மகேசுவர பூசைக் கட்டிடம் ... | 1,0000 |
| 35 | திருப்பனந்தாள் ஸ்ரீ அருணஜடேசுவர சுவாமிக்கு வெள்ளிக் கவசம் ... | 5,400 |
| 36 | விஷ்ணுபுரத்தில் மகாத்மா காந்தி நினைவு ஹைஸ்கூல் படிப்பக நிதி ... | 1,000 |
| 37 | குடந்தையில் ராஜாஜி அபிராமிஅந்தாதிப்பரிசு... | 3,500 |
| 38 | திருநெல்வேலியில் ஸ்ரீ அரியநாயக முதலியார் நினைவு அபிராமி அந்தாதிப் பரிசு ... | 3,500 |
| 39 | திருப்பனந்தாளில் அப்பூதி அடிகள் நினைவு தண்ணீர்ப் பந்தல் தருமம் ... | 3,500 |
| 40 | ஸ்ரீவைகுண்டத்தில் படிப்பக நிதி ... | 3,500 |

| தொடர் எண் | தரும விபரம் | மூலதனம் ரூபாய் |
|---|---|---|
| 41 | சிதம்பரம் உயர்தரப் பாடசாலை மாணவர்களுக்கு உணவு நிதி ... | 35,000 |
| 42 | சிதம்பரத்தில் மார்கழித் திருவாதிரை, ஆனி உத்தர நாட்களில் அன்னதானம் ... | 12,000 |
| 43 | இராமேசுவரத்தில் ஆடி, தை, அமாவாசைகளில் அன்னதானம் ... | 3,500 |
| 44 | ஸ்ரீவைகுண்டத்தில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நூல் நிலையக் கட்டிடம் ... | 26,025 |
| 45 | பஞ்சாப் அகதிகளுக்கு நன்கொடை ... | 5,000 |
| 46 | அரியநாயகிபுரத்தில் நூல் நிலைய நிதி ... | 3,500 |
| 47 | ஸ்ரீ காசி கேதாரிசுவரர் கோயிலில் ஸ்ரீ குமாரசாமி அன்னதானம் நவராத்திரி விஜயதசமி நாட்களில் ... | 5,000 |
| 48 | ஸ்ரீவில்லிபுத்தூரில் ஸ்ரீ குருஞானசம்பந்தர் நினைவுத் தேவாரப் பரிசு ... | 3,500 |
| 49 | திருப்பனந்தாள் ஸ்ரீ அருணஜடேசுவர சுவாமி கோயிலில் மின்சார தீபம் போட ... | 7,500 |
| 50 | காஞ்சியில் மூவர் தேவாரப் பரிசு ... | 5,000 |
| 51 | திருவஞ்சைக் களத்தில் ஆடிச் சுவாதியில் சேரமான் பெருமாள் நினைவு அன்னதானம் ... | 7,000 |
| 52 | 28-வது ஸ்ரீ செந்திலாண்டவன் அன்னதானம் ஸ்ரீவைகுண்டம் நான்காண்டு உதவி நிதி ... | 30,000 |
| 53 | 30-வது ஸ்ரீ செந்திலாண்டவன் அன்னதானம் ஸ்ரீ காசிப் பல்கலைக் கழகத்திற்கு ஆறு ஆண்டு உதவி மூலதனம் ... | 42,000 |
| 54 | 28-வது ஸ்ரீ செந்திலாண்டவன் அன்னதானம் திருச்செந்தூர் மூன்றாண்டு உதவி மூலதனம் ... | 20,500 |

| தொடர் எண் | தரும விபரம் | | மூலதனம் ரூபாய் |
|---|---|---|---|
| 55 | ஸ்ரீவைகுண்டம் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் படிப்பகப் பராமரிப்புக்காகக் கட்டிடமும் நிலமும் | ... | 15,000 |
| 56 | மாளவியாஜி பெயரால் கல்கத்தா, டெல்லி, அலகாபாத், லக்னோ, ஆக்ரா, அலிகார் முதலிய பல்கலைக் கழகங்களில் சைவசித்தாந்த உபந்நியாசக் கட்டளை | ... | 5,000 |
| 57 | செந்திலாண்டவன் அன்னதானம் சிதம்பரம், மதுரை, திருச்செந்தூர் (ஆவணி மூலத்தில்) நிலப்பெறுமானம் | ... | 60,000 |
| 58 | திருப்பனந்தாள் மண்ணியாற்றங்கரையில் சோமேசர் ஸ்நான கட்டம் நிறுவ | ... | 2,275 |
| 59 | ஸ்ரீவைகுண்டத்தில் பெண்கள் உயர்நிலைப்பள்ளி நிறுவ | ... | 45,000 |
| 60 | ஸ்ரீவைகுண்டம் தேவார மாணவர்கள் காசி யாத்திரை நிதி | ... | 5,000 |
| 61 | பனைக் கல்லூரியில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவுப் பரிசு | ... | 5,000 |
| 62 | (B) ஸ்ரீ காசிப் பல்கலைக் கழகத்தில் சைவசித்தாந்த நிதிக்கு அதிகப்படியாக அளித்தது | ... | 16,000 |
| 63 | 30-வது ஸ்ரீ செந்திலாண்டவன் அன்னதானம் மதுரை இரண்டாண்டு உதவி மூலதனம் | ... | 14,000 |
| 64 | ஸ்ரீவைகுண்டம் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் உயர்நிலைப்பள்ளி மாணவிகள் ஹாஸ்டல் ஏற்படுத்த நன்செய் நிலக்கிரையம் | ... | 14,000 |
| 65 | 28-வது ஸ்ரீ செந்திலாண்டவன் அன்னதானம் ஸ்ரீவைகுண்டம் வகையரு — திருநெல்வேலி மூன்றாண்டு உதவி மூலதனம் | ... | 15,000 |

| தொடர் எண் | தரும விபரம் | மூலதனம் ரூபாய் |
|---|---|---|
| 66 | 30-வது ஸ்ரீ செந்திலாண்டவன் அன்னதானம் ஸ்ரீ காசி வகையரு கும்பகோணம் இரண்டாண்டு உதவி மூலதனம் ... | 14,000 |
| 67 | ஸ்ரீவைகுண்டம் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் ஆண்கள் உயர்நிலைப்பள்ளிக்கு நன்கொடை ... | 20,000 |
| 68 | ஸ்ரீவைகுண்டம் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் மடத்திற்கு அச்சகம் வாங்க நன்கொடை கட்டிடம் உள்பட ... | 27,975 |
| 69 | ஸ்ரீவைகுண்டம் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பெண்கள் உயிர்நிலைப்பள்ளி மாணவிகளுக்கு உபகாரச் சம்பளமளிக்க நெல்லை ஜில்லா போர்டாரிடம் ... | 10,000 |
| 70 | ஸ்ரீவைகுண்டம் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் ஆண்கள் உயர்நிலைப்பள்ளிக்கு விளையாட்டு இடம் வாங்க நன்கொடை ... | 11,000 |
| 71 | ஸ்ரீ காசியில் தை மாதத்தில் இந்தியக் குடியரசு தினம் அன்னதானம் ... | 10,000 |
| 72 | ஸ்ரீவைகுண்டத்தில் ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் நினைவு மாணவர்கள் உணவு நிதி நிலப் பெறுமானம் ... | 1,50,000 |
| 73 | ஸ்ரீவைகுண்டம் ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் மடத்திற்குப் பன்னிரு திருமுறைகள் அச்சிட நிலப்பெறுமானம் ... | 50,000 |
| 74 | சண்டேசுவர நாயனுர் நினைவுத் தண்ணீர்ப் பந்தல் தருமம் திருவாப்பாடி ... | 3,500 |
| 75 | காஞ்சிபுரத்தில் ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள் நினைவு உபகாரச் சம்பள நிதி ... | 7,000 |
| 76 | திருச்செந்தூரில் ஸ்ரீ செந்திலாண்டவன் தேவாரப் பரிசு நிதி ... | 5,000 |

| தொடர் எண் | தரும விபரம் | | மூலதனம் ரூபாய் |
|---|---|---|---|
| 77 | சென்னையில் ஸ்ரீ ஆதிகுமரகுருபர சுவாமிகள் நினைவுத் திருக்குறள் பதிப்பு நிதி | ... | 35,000 |
| 78 | ஸ்ரீவைகுண்டம் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் பெண்கள் உயர்நிலைப்பள்ளியில் மங்கையர்க் கரசியார் நினைவுப் பரிசு நிதி | ... | 3,500 |
| 79 | கும்பகோணம் தாலூகா மேலச் சூரியமூலை கண்டியன் பழவாற்றின் மீது பாலம் கட்ட | ... | 8,390 |
| 80 | ஸ்ரீவைகுண்டத்தில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவுத் தண்ணீர்ப் பந்தல் நிதி | ... | 3,500 |
| 81 | பழுத்த தமிழ்ப் புலவர் காசி யாத்திரை நிதி செந்தமிழ்க் கல்லூரி திருப்பனந்தாள் | ... | 5,000 |
| 82 | திருச்செங்காட்டங்குடியில் சிறுத்தொண்டர் நினைவு அன்னதானம் சித்திரைப் பரணியில் | ... | 7,000 |
| 83 | திருவஞ்சைக்களத்தில் ஸ்ரீ சேரமான், ஸ்ரீ சுந்தர மூர்த்திநாயனர் நினைவு வாசகசாலை நிறுவ | ... | 5,000 |
| 84 | திருநாரையூரில் ஸ்ரீ நம்பியாண்டார் நம்பிகள் நினைவுத் திருமுறை நிதி | ... | 35,000 |
| 85 | இராமநாதபுரத்தில் ஸ்ரீ தாயுமானவர் சன் மார்க்க சங்க நூல்நிலைய நிதி | ... | 5,000 |
| 86 | லால்குடியில் ஸ்ரீ காரைக்கால் அம்மையார் நினைவு மாணவிகள் உபகாரச் சம்பள நிதி | ... | 15,000 |
| 87 | அவிநாசியில் முந்நூல் அணியும் கலியாண நிதி திருப்பனந்தாளில் சுந்தரமூர்த்தி சுவாமிகள் நினைவுப் பரிசு நிதி | ... | 5,000 |
| 88 | குடந்தையில் ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் நினைவு நீதிநெறி விளக்கப் பரிசு | ... | 5,000 |
| 89 | திருப்பூந்துருத்தியில் அப்பர் நினைவு அன்னம் பாலிப்பு-சித்திரைச் சதயத்தில் (கட்டடம்) | ... | 15,000 |

| தொடர் எண் | தரும விபரம் | | மூலதனம் ரூபாய் |
|---|---|---|---|
| 90 | திருநெல்வேலி ஜில்லாவில் ஸ்ரீ ஆதி குமர குருபர சுவாமிகள் நினைவுத் தமிழ்ப் பரிசு | ... | 5,000 |
| 91 | ஸ்ரீ மாசிலாமணி தேசிக ஞானசம்பந்தர் நினைவுப் பரிசு, ஸ்ரீவைகுண்டம் | ... | 3,500 |
| 92 | ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவு மார்கழி மாத அன்னதானம், இராமேசுவரம் | ... | 3,500 |
| 93 | ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவு அன்ன தானம் சென்னபுரி அன்னதான சமாஜம் சென்னை (வைகாசி அமரபக்ஷம் திருதியை) | ... | 5,000 |
| 94 | காசியில் ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள் நினைவு அன்னதானம் (ஆனி மகத்தில்) | ... | 5,000 |
| 95 | திருச்செந்தூரில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவு அன்னதானம் (வைகாசி அமரபக்ஷம் திருதியை) | ... | 5,000 |
| 96 | திருச்சிராப்பள்ளியில் ஸ்ரீ தாயுமான சுவாமிகள் நினைவுக் கட்டிடம் நிறுவ | ... | 5,000 |
| 97 | திருநாரையூரில் ஸ்ரீ குருஞானசம்பந்த சுவா மிகள் நினைவுக் கட்டிடம் நிறுவ | ... | 7,000 |
| 98 | திருச்சிராப்பள்ளியில் ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் நினைவு நீதிநெறி விளக்கப் பரிசு | ... | 5,000 |
| 99 | தஞ்சை, கலைக்கூடத்திற்கு நன்கொடை | ... | 5,000 |
| 100 | மணிக்குடியில் கடலூர்க் கலயர் புனற்பந்தர் நிதி | ... | 3,500 |
| 101 | காசியில் ஸ்ரீ மாசிலாமணித் தேசிக ஞான சம்பந்த சுவாமிகள் நினைவு மாசி மாத அன்னதானம் | ... | 5,000 |
| 102 | திருவாங்கூர்ப் பல்கலைக் கழகத்தில் திருவள்ளு வர் நினைவுப் பரிசு | ... | 5,000 |

| தொடர் எண் | தரும விபரம் | மூலதனம் ரூபாய் |
|---|---|---|
| 103 | ஸ்ரீ காசியில் பங்குனி மாதத்தில் கமலை ஞானப் பிரகாசர் நினைவு அன்னம் பாலிப்பு ... | 5,000 |
| 104 | திருச்செந்தூரில் ஐக்கிய வேளாள சங்கப் படிப்பக நிதி ... | 5,000 |
| 105 | காசியில் சித்திரை மாதத்தில் அப்பர் நினைவு அன்னம் பாலிப்பு ... | 7,000 |
| 106 | ஆடுதுறையில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் உயர்நிலைப் பள்ளி உதவி நிதி ... | 50,000 |
| 107 | செந்திலாண்டவன் திருவருள் பாலிப்பு நிதி நிலப் பெறுமானம் ... | 50,000 |
| 108 | திருச்செந்தூரில் ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் நினைவு நித்திய மகேசுவர பூஜை நிதி ... | 12,000 |
| 109 | ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் நினைவு நீதிநெறி விளக்கப் பரிசு – திருச்செந்தூர், ஸ்ரீவைகுண்டம் உயர்நிலைப் பள்ளிகளில் ... | 7,000 |
| 110 | ஸ்ரீ காசியில் கச்சியப்ப சிவாசாரியர் நினைவு அன்னம் பாலிப்பு கார்த்திகை மாதத்தில் ... | 7,000 |
| 111 | சென்னைக் கல்லூரிகளில் ஸ்ரீ குருஞான சம்பந்த சுவாமிகள் நினைவுச் சிவபோக சாரம் பரிசு நிதி ... | 5,000 |
| 112 | தஞ்சையில் ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள் நினைவுத் திருவாசகப் பரிசுச் சேமவைப்பு ... | 5,000 |
| 113 | மதுரையில் ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள் நினைவுத் திருவாசகப் பரிசுச் சேமவைப்பு ... | 5,000 |
| 114 | திருநாவுக்கரசர் தண்ணீர்ப் பந்தல் தருமநிதி, தத்துவாஞ்சேரி ... | 3,500 |
| 115 | காஞ்சிபுரத்தில் க்ச்சியப்ப சிவாசாரியர் நினைவு அன்னம் பாலிப்பு மாசி-மிருகசிருஷம் ... | 7,000 |

| தொடர் எண் | தரும விபரம் | மூலதனம் ரூபாய் |
|---|---|---|
| 116 | திருக்காளத்தியில் கண்ணப்பர் நினைவு அன்னம் பாலிப்பு ... | 5,000 |
| 117 | ஸ்ரீ காசியில் சுந்தரர் நினைவு ஆடி மாத அன்னம் பாலிப்புச் சேமவைப்பு ... | 7,000 |
| 118 | ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் சகலகலாவல்லி மாலைப் பரிசு – அரசினர் பெண்கள் உயர் நிலைப்பள்ளி, மாயூரம் ... | 1.000 |
| 119 | சிதம்பரத்தில் ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள் நினைவுத் திருவாசகப் பரிசு ... | 5.000 |
| 120 | வெள்ளியம்பலவாண முனிவர் நினைவு முதுமொழிமேல் வைப்புப் பரிசு — திருவாங்கூர்ப் பல்கலைக் கழகத்தில் ... | 3.500 |
| 121 | காசியில் ஜாபள்ளி ஜமீன்தார் அன்னம் பாலிப்புச் சேமவைப்பு ... | 6.000 |
| 122 | மதுரையில் கமலை வெள்ளியம்பலவாணர் நினைவு முதுமொழிமேல் வைப்புப் பரிசு ... | 5.000 |
| 123 | திருவாதவூரில் ஸ்ரீ மாணிக்கவாசகர் நினைவு அன்னம் பாலிப்பு நிதி ... | 5,000 |
| 124 | சீகாழியில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவுப் பால் நிதி ... | 3.500 |
| 125 | திருவண்ணாமலையில் ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள் நினைவுத் திருவாசகப் பரிசு ... | 5.000 |
| 126 | கல்கத்தா சர்வகலாசாலையில் ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் தமிழ்ப் பரிசு நிதி ... | 3.500 |
| 127 | தில்லையில் பல்லாண்டு விளக்குநிதி(கட்டிடம்)... | 5.000 |
| 128 | ஸ்ரீ காசியில் அரிமர்த்தன பாண்டியன் நினைவு ஆவணித் திங்கள் அன்னம் பாலிப்பு ... | 7.000 |
| 129 | ஸ்ரீ காசியில் திருமூலர் நினைவு ஐப்பசித் திங்கள் அன்னம் பாலிப்பு ... | 7,000 |

| தொடர் எண் | தரும விபரம் | மூலதனம் ரூபாய் |
|---|---|---|
| 130 | காஞ்சிபுரத்தில் ஸ்ரீ கமலை வெள்ளியம்பலவாண முனிவர் முதுமொழிமேல் வைப்புப் பரிசுச் சேமவைப்பு ... | 5,000 |
| 131 | திருப்பனந்தாள் ஸ்ரீ அருணசடேசுவரர் கொள்ளிடத் தீர்த்த விழாநிதி (கட்டிடம்) ... | 12,000 |
| 132 | இராமேசுவரத்தில் கார்வேட் நகர் ராஜா ஸ்ரீ பொம்மராஜு மகாராஜுலிங்காரு நினைவு அன்னதானம் ... | 5,000 |
| 133 | கும்பகோணத்தில் கார்வேட் நகர் ராஜா ஸ்ரீ வெங்கடப்பெருமாள் ராஜுலிங்காரு நினைவு அன்னதானம் (மாசி மகத்தில்) ... | 3,500 |
| 134 | திருவண்ணுமலை (பராசக்தியம்மன் சந்நிதியில்) திருவெம்பாவை சலவைக்கல் பதிப்பு ... | 2,500 |
| 135 | சிதம்பரத்தில் திருப்பல்லாண்டு சிவபுராணம் சலவைக்கல் பதிப்பு, திருவெம்பாவை எழுத்து, தேர்ச்சிலைகள், தேர்க்கொட்டகை, ஒலி பெருக்கி வகையரு ... | 14,500 |
| 136 | (கும்பகோணம்) திருப்புறம்பயம் சாட்சிநாத சுவாமி தேவஸ்தானம் திருப்பணி, மின் விளக்கு, தேர்ச்சிலை வகையரு ... | 7,700 |
| 137 | சுவாமிமலை, திருச்செந்தூர், மதுரை, திருத்தணிகை, மைலாப்பூர், திருவண்ணுமலை, திருநெல்வேலி, கச்சியேகம்பம், கச்சிக்குமர கோட்டம் திருப்பனந்தாள் அருணசடேசுவரர் தேவஸ்தானம், கும்பகோணம், திருப்பரங்குன்றம், திருக்கழுக்குன்றம், வைத்தீஸ்வரன் கோயில், சீகாழி, திருக்கடவூர், திருவையாறு, தருமபுரம், திருச்சிராப்பள்ளி, திருவானைக்கா, திருவாதவூர், விருத்தாசலம், திருவேட்டீசுவரன்பேட்டை, தென்காசி, திருவொற்றியூர் ஆகிய தலங்களில் "சிவ சிவ" ஒளிவளர் விளக்கு அமைக்க ... | 10,000 |

| தொடர் எண் | தரும விபரம் | மூலதனம் ரூபாய் |
|---|---|---|
| 138 | தில்லையில் (சிதம்பரத்தில்) ராஜராஜ அபய குலசேகர சோழன் நினைவு தேவார வைப்பு நிதி (கட்டிடங்கள்) ... | 10,000 |
| 139 | திருப்பனந்தாள் ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி ஆதி குமரகுருபர சுவாமிகள் மகேசுவர பூசை நிதி (வைகாசி அமர பக்ஷம் திருதியை) நிலப் பெறுமானம் ... | 1,00,000 |
| 140 | காஞ்சிபுரத்தில் ஸ்கந்த ஷஷ்டி விழாவில் கந்தபுராண பிரசங்க நிதி ... | 3,500 |
| 141 | திருப்பனந்தாள் ஸ்ரீ காசிமடத்தில் ஸ்ரீ-ல-ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் நினைவு நித்திய மகேசுவர பூசை நிதி நிலப்பெறுமானம் ... | 2,00,000 |
| 142 | காசியில் காளத்தி ராஜா நினைவு நாள் காளஹஸ்தி பதிச்சுர பூசை நிதி ... | 5.000 |
| 143 | நாகர்கோவிலில் ஸ்ரீ தாணுமாலயப் பெருமான் நூல்நிலையப் படிப்பக நிதி ... | 3,500 |
| 144 | காசியில் திருஞானசம்பந்தர் நினைவு வைகாசித் திங்கள் அன்னம் பாலிப்பு ... | 7,000 |
| 145 | திருவாரூரில் ஸ்ரீ கமலை வெள்ளியம்பலவாண முனிவர் முதுமொழி மேல்வைப்புப் பரிசுநிதி ... | 3,500 |
| 146 | திருப்பனந்தாளில் ஸ்ரீ செந்திலாண்டவன் அருளிப்பாடு நிதி நிலப்பெறுமானம் ... | 2,00,000 |
| 147 | திருவிடைமருதூரில் தைப்பூச அன்னம் பாலிப்பு ... | 5,000 |
| 148 | தில்லையில் பெரிய புராணப் பிரசங்க நிதி ... | 7,000 |
| 149 | ஸ்ரீ காசியில் ஆதி குமரகுருபர சுவாமிகள் நினைவு அன்னதானம் ஆனி மாதம் முழுவதும் ... | 7,000 |

| தொடர் எண் | தரும விபரம் | மூலதனம் ரூபாய் |
|---|---|---|
| 150 | இராமேசுவரத்தில் ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் நினைவு அன்னதானம் ஆடி மாதம் முழுவதும் ... | 3,500 |
| 151 | மதுரையில் திருவிளையாடற்புராணப்பிரசங்க நிதி ... | 7,000 |
| 152 | ஸ்ரீ காசியில் ஆதி குமரகுருபர சுவாமிகள் நினைவு புரட்டாசி மாத அன்னம் பாலிப்புநிதி... | 7,000 |
| 153 | காசியில் ஸ்ரீ-ல-ஸ்ரீ சாமிநாத சுவாமிகள் நினைவுநாள் அன்னம் பாலிப்பு ... | 3,500 |
| 154 | காசியில் கோச்செங்கட் சோழர் நினைவு மாசி மாச அன்னம் பாலிப்பு ... | 3,500 |
| 155 | மதுரையில் பெரியபுராணப் பிரசங்க நிதி ... | 7,000 |
| 156 | மதுரையில் கந்தபுராணப் பிரசங்க நிதி ... | 3,500 |
| 157 | சிதம்பரத்தில் தில்லைவாழந்தணர் அன்னம் பாலிப்பு நிலப்பெறுமானம் ... | 1,50,000 |
| 158 | கல்கத்தா பல்கலைக்கழகத்தில் ஸ்ரீ காசிவாசி சுவாமிநாத சுவாமிகள் நினைவுத் தமிழ்ப் பரிசு நிதி ... | 3,500 |
| 159 | சிதம்பரத்தில் திருவாசகப் பிரசங்க நிதி ... | 7,000 |
| 160 | திருக்கழுக்குன்றத்தில் மாணிக்கவாசகர் நினைவு அன்னம் பாலிப்பு (ஆனி மகம்) ... | 5,000 |
| 161 | சீகாழியில் சட்டைநாதர் புழுகு நெய் சாத்து நிதி ... | 3,500 |
| 162 | மதுரையில் ஸ்ரீ-ல-ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவுப் பசு நிதி ... | 3,500 |
| 163 | ஸ்ரீ காசியில் காரைக்கால் அம்மையார் நினைவு அன்னம் பாலிப்பு (பங்குனி மாதத்தில்) ... | 5,000 |

| தொடர் எண் | தரும விபரம் | | மூலதனம் ரூபாய் |
|---|---|---|---|
| 164 | ஸ்ரீ காசியில் இசை ஞானியார் நினைவு அன்னம் பாலிப்பு (சித்திரை மாதத்தில்) | ... | 5,000 |
| 165 | ஸ்ரீ காசியில் திருநீலகண்ட நாயனார் நினைவு அன்னம் பாலிப்பு (வைகாசி மாதத்தில்) | ... | 3,000 |
| 166 | ஸ்ரீ காசியில் நன்பாட்டுப் புலவர் நினைவு ஆனி மாத அன்னம் பாலிப்புச் சேமவைப்பு | ... | 3,000 |
| 167 | இராமேசுவரத்தில் ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி சாமிநாத சுவாமிகள் நினைவுநாள் அன்னம் பாலிப்பு சேமவைப்பு | ... | 3,500 |
| 168 | ஸ்ரீ காசியில் மும்மையால் உலகாண்ட மூர்த்தி நினைவு ஆடி மாச அன்னம் பாலிப்பு | ... | 3,000 |
| 169 | திருவாரூரில் மனுநீதிச் சோழர் நினைவுப் பரிசு நிதி | ... | 3,500 |
| 170 | ஸ்ரீ காசியில் குங்குலியக் கலயர் நினைவு ஆவணித் திங்கள் அன்னம் பாலிப்பு | ... | 3,000 |
| 171 | திருப்பனந்தாளில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவு பிரசவ விடுதி கட்டுவதற்கு நன்கொடை | ... | 5,000 |
| 172 | ஸ்ரீ காசியில் உருத்திர பசுபதியார் நினைவு புரட்டாசி மாத அன்னம் பாலிப்பு | ... | 3,000 |
| 173 | ஸ்ரீ காசியில் நெடுமாறநாயனார் நினைவு ஐப்பசி மாத அன்னம் பாலிப்பு | ... | 3,000 |
| 174 | ஸ்ரீ காசியில் ஆனாயநாயனார் நினைவு கார்த்திகை மாத அன்னம் பாலிப்பு | ... | 3,000 |
| 175 | இராமேசுவரத்தில் கார்வேட் நகர் ஸ்ரீ பொம்மராஜு நினைவு அன்னம் பாலிப்பு | ... | 6,000 |
| 176 | ஸ்ரீ காசியில் ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி இராமலிங்க சுவாமிகள் நினைவு மாசிமாத அன்னம் பாலிப்பு நிதி | ... | 3,500 |

| தொடர் எண் | தரும விபரம் | | மூலதனம் ரூபாய் |
|---|---|---|---|
| 177 | வடதிருவாலங்காட்டில் காரைக்கால் அம்மையார் நினைவு அன்னம் பாலிப்பு | ... | 5,000 |
| 178 | காஞ்சிபுரத்தில் ஸ்ரீ-ல-ஸ்ரீ காசிவாசி சாமிநாத சுவாமிகள் நினைவுநாள் அன்னம் பாலிப்புச் சேமவைப்பு | ... | 5,000 |
| 179 | காஞ்சிபுரத்தில் கச்சியப்ப சிவாசாரியர் நினைவுப் பசுப் பரிசு நிதி | ... | 3,500 |
| 180 | காஞ்சிபுரத்தில் திருக்கச்சியேகம்பம் உருத்திராக்கத் தேவார நிதி (கட்டடங்கள்) | ... | 50,000 |
| 181 | சுவாமிமலையில் அப்பர் நினைவு புனற்பந்தர் நிதி | ... | 3,500 |
| 182 | திருப்பனந்தாள் சிவ சிவ கால்நடை வைத்திய சாலைக்குப் புதிய கட்டிடம் கட்டுவதற்கு நன்கொடை | ... | 3,000 |
| 183 | சிவன் கோயில்களில் தேவாரப் பாசுரங்களைப் பிற தெய்வப் பாடல்களோடு கொண்ட கல்லெழுத்துப் பதிப்பு:- மதுரை, திருக்கழுக்குன்றம், மைலாப்பூர், திருச்செந்தூர், திருநெல்வேலி, காஞ்சிபுரம், திருவாரூர், திருக்குற்றாலம், திருப்பனந்தாள், திருப்புன்கூர், சீகாழி, வேதாரண்யம், திருவையாறு, அவிநாசி, திருவெண்ணெய்நல்லூர், திருவதிகை, திருமருகல், சுவாமிமலை, வைத்தீஸ்வரன் கோவில், திருச்சிராப்பள்ளி, திருவோத்தூர், திருவிடைக்கழி, வடதிருமுல்லைவாயில், பழநி, திருத்தெளிச்சேரி, திருக்கோலக்கா முதலிய தலங்களில் | ... | 36,300 |
| 184 | மதுரைச் சொக்கலிங்கம் சந்தன மெய்ப்பூச்சு நிதி | ... | 7,000 |

| தொடர் எண் | தரும விபரம் | | மூலதனம் ரூபாய் |
|---|---|---|---|
| 185 | சிதம்பரம் நடராஜா சபையில் கீழ்ப்புறம் மேற்புறம் அருகால் கதவு வெள்ளித்தகடு நகாஸ் வேலை செய்ய வெள்ளிக் கிரையம் கூலி வகையறு பூராவுக்கும் நன்கொடை | ... | 7,000 |
| 186 | மதுரைத் தேவார நிதி (கட்டடங்கள்) | ... | 50,000 |
| 187 | திருச்சிராப்பள்ளியில் தாயுமானவர் காவிரித் திருமஞ்சன நிதி | ... | 7,000 |
| 188 | திருப்பனந்தாளில் குடிதண்ணீர் வசதிக்கு நான்கு குழாய்கள் நிறுவ அன்பளிப்பு | ... | 4,500 |
| 189 | இராமேசுவரத்தில் காளத்தி ராஜா ஸ்ரீ வெங்கடப்ப நாயுடு பகதூர் வாரு நினைவு அன்னதானம் | ... | 10,000 |
| 190 | இராமேசுவரத்தில் கார்வேட் நகர ராஜா ஸ்ரீ பொம்மராஜு பகதூர் அவர்களின் நினைவு அன்னதானம் | ... | 12,000 |
| 191 | ஸ்ரீ காசியில் காளத்திராஜா வெங்கடப்ப நாயனிம்வாரு நினைவு அன்னம் பாலிப்பு | ... | 8,500 |
| 192 | ஸ்ரீவைகுண்டத்தில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவு சகலகலாவல்லிமாலைப் பரிசு | ... | 2,000 |
| 193 | கும்பகோணத்தில் கார்வேட்நகர் ராஜா வெங்கடப்பெருமாள் ராஜலிங்காரு நினைவு அன்னம் பாலிப்பு | ... | 12,000 |
| 194 | திருச்செந்தூரில் ஸ்ரீ செந்திலாண்டவன் நினைவுத் தண்ணீர்ப் பந்தர் நிதி | ... | 3,500 |
| 195 | இராமேச்சுரம் உயர்நிலைப் பள்ளிக்கு நன்கொடை | ... | 4,200 |
| 196 | திருலோக்கி ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் தொடக்கப் பள்ளி கட்டிடத்திற்கு | ... | 5,000 |

| தொடர் எண் | தரும விபரம் | மூலதனம் ரூபாய் |
|---|---|---|
| 197 | சிதம்பரத்தில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவு நித்திய மகேசுவர பூசை நிதி நிலப் பெறுமானம் ... | 1,00,000 |
| 198 | திருநெல்வேலி ஜில்லா பழைய பாபநாசத்தில் அகத்தியர்கோவிலில் மண்டபம் கட்டுவதற்கு நன்கொடை ... | 3,500 |
| 199 | திருவாதவூர்ப் பெரியகோவிலில் நடராஜர் விமானத்தைப் புதுப்பிக்க நன்கொடை ... | 3,000 |
| 200 | ஹரத்துவாரில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவு நாள் அன்னம் பாலிப்பு - வைகாசி கிருஷ்ணபக்ஷம் திருதியை ... | 8,000 |
| 201 | கன்யாகுமரியில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவு நாள் அன்னம் பாலிப்பு - வைகாசி கிருஷ்ணபக்ஷம் திருதியை ... | 7,000 |
| 202 | ஸ்ரீவைகுண்டம் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் தொடக்கப் பள்ளி கட்டடத்துக்கு நன்கொடை ... | 4,000 |
| 203 | ஸ்ரீ காசியில் குமரகுருபர சுவாமிகள் நினைவு கேதாரீச்சுரர் திருக்கோயில் நிதி (கட்டடங்கள் முதலியன) ... | 1,00,000 |
| 204 | ஸ்ரீ இராமேச்சுவரத்தில் கோச்செங்கட் சோழர் நினைவு மாசி மாத அன்னம் பாலிப்பு ... | 4,000 |
| 205 | மைலாப்பூரிலும், குன்றத்தூரிலும் திருவள்ளுவர் சேக்கிழார் நினைவு அன்னம் பாலிப்பு ... | 20,000 |
| 206 | திருச்செந்தூரில் ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் நினைவு கோ சம்வர்த்தன நிதி ... | 35,000 |
| 207 | சிதம்பரத்தில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நினைவு நாள் அன்னம் பாலிப்பு - வைகாசி அமரபக்ஷம் திருதியை (கட்டடம் முதலியன) ... | 20,000 |

| தொடர் எண் | தரும விபரம் | மூலதனம் ரூபாய் |
|---|---|---|
| 208 | சுவாமி மலையில் ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் நினைவு கோ சம்வர்த்தன நிதி ... | 30,000 |
| 209 | திருவாரூர் கழக உயர்நிலைப் பள்ளியில் பெண்கள் தங்குமிடம் அமைக்க நன்கொடை ... | 3,000 |
| 210 | திருப்பூந்துருத்தியில் அப்பர் திருமடத்துக்கு நன்கொடை ... | 10,000 |
| 211 | நாகர்கோவில் இந்துக் கல்லூரியில் ஸ்ரீ குமர குருபர சுவாமிகள் வழிபாட்டு மண்டபம் அமைக்க ரூ. 30,000/- த்தில் இதுவரை அளித்தது ... | 15,000 |
| 212 | காசியில் தருமை ஞான சம்பந்த சுவாமிகள் நினைவு அன்னம் பாலிப்பு ... | 7,000 |
| 213 | திருப்பூந்துருத்தியில் அப்பர் திருமடத்தில் அப்பர் நினைவு நூல் நிலையம் ... | 6,500 |
| 214 | காசியில் மங்கையர்க்கரசியார் நினைவு அன்னம் பாலிப்பு ... | 7,000 |
| 215 | ரிஷிகேசத்தில் சாதுக்களுக்கு (அடியார்களுக்கு) அன்னம் பாலிப்பு (வைகாசி அமர பக்ஷம் திருதியை) ... | 7,000 |
| 216 | தஞ்சாவூர் ராஜா சரபோஜி ஆர்ட் கல்லூரிக்கு நன்கொடை ... | 5,000 |
| 217 | திரைலோக்கிய சுந்தரர் நினைவு மகா சிவ ராத்ரிக் கட்டளை ... | 1,000 |
| 218 | டாக்டர் உ. வே. சாமிநாதய்யர் நினைவு சென்னை மாணவிகள் திருக்கழுக்குன்றம் யாத்திரை நிதி ... | 3,000 |
| 219 | மதுரை ஸ்ரீ மூர்த்தி நாயனர் நினைவு விழா நிதி... | 2,500 |

| தொடர் எண் | தரும விபரம் | மூலதனம் ரூபாய் |
|---|---|---|
| 220 | காஞ்சிபுரத்தில் ஸ்ரீ ஆதி குமரகுருபர சுவாமிகள் நினைவு நாள் அன்னம் பாலிப்பு நிதி (வைகாசி அமரபக்ஷம் திருதியை) ... | 7,000 |
| 221 | பழையபாபநாசத்தில் அகஸ்தியர்தேவார நிதி ... | 25,500 |
| 222 | மதுரையில் இன்னிசைத் தேவார நிதி (வைகாசி அமரபக்ஷம் திருதியையில் திருமுறை விழா நடத்த) ... | 25,000 |
| 223 | காசியில் சேதுகாவலர் நினைவு அன்னம் பாலிப்பு ... | 5,000 |
| 224 | திருக்கேதாரத்தில் ஆதி குமரகுருபர சுவாமிகள் நினைவுநாள் அன்னம் பாலிப்பு (வைகாசி அமரபக்ஷம் திருதியை) ... | 7,000 |
| 225 | இராமேசுவரத்தில் உமாபதி சிவாசாரியர் நினைவு அன்னம் பாலிப்பு நிதி ... | 6,500 |
| 226 | திருக்குற்றாலநாதர் தேவார நிதி ... | 26,500 |
| 227 | சிதம்பரம் ஸ்ரீ நடராஜா கோவில் ஆயிரக்கால் மண்டபத் திருப்பணிக்கு ... | 5,000 |
| 228 | சிதம்பரம் ஸ்ரீ நடராஜப் பெருமானுக்குப் பொன் தாம்பாளம் உபயம் ... | 4,500 |
| 229 | சென்னைப் பல்கலைக்கழக நூற்றாண்டு விழாவில் குமரகுருபர சுவாமிகள் நினைவு மாணவர் ஆராய்ச்சி அறை கட்டுவதற்கு ... | 2,500 |
| 230 | இராமேசுவரத்தில் ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் நித்திய மகேசுவர பூசை நிதி (நிலமும் கட்டடங்களும்) ... | 1,00,000 |
| 231 | வாரணாசியில் கார்வேட்நகர் ராஜா காவேரி திருவேங்கட நாதராஜு நினைவுக் கார்த்திகை மாச அன்னம் பாலிப்பு ... | 6,000 |

| தொடர் எண் | தரும விபரம் | மூலதனம் ரூபாய் |
|---|---|---|
| 232 | ஸ்ரீ காசியில் காரிநாயனார் நினைவு மாசி மாச அன்னம் பாலிப்பு நிதி ... | 5,000 |
| 233 | ஸ்ரீ காசியில் தண்டியடிகள் நினைவு பங்குனி மாச அன்னம் பாலிப்பு நிதி ... | 5,000 |
| 234 | திருப்பரங்குன்றத்தில் ஸ்ரீ சோமசுந்தரக் கடவுள் தண்ணீர்ப்பந்தர் நிதி ... | 4,000 |
| 235 | வாரணாசியில் திருக்குறிப்புத் தொண்டர் நினைவு சித்திரை மாச அன்னம் பாலிப்பு நிதி ... | 3,000 |
| 236 | வாரணாசியில் முருக நாயனார் நினைவு வைகாசி மாச அன்னம் பாலிப்பு நிதி ... | 5,000 |
| 237 | வாரணாசியில் சண்டேசுவர நாயனார் நினைவுத் தை மாச அன்னம் பாலிப்பு நிதி ... | 5,000 |



| | | ரூ. | ந.பை |
|---|---|---|---|
| 27 | கந்தர் கலிவெண்பா, திரு. பட்டுச்சாமி ஓதுவார் குறிப்புரையுடன் ... | 0 | 37 |
| 28 | நீதிநெறிவிளக்கம்—ஆங்கிலம் ஹிந்தி மொழிபெயர்ப்புக்களுடன் ... | 0 | 50 |
| 29 | சகலகலாவல்லிமாலை—ஆங்கிலமும் ஹிந்தியம் கூடியது ... | 0 | 6 |
| 30 | அபிராமி அந்தாதி கி. வா. ஜ. குறிப்புரையுடன் (மறுபதிப்பு அச்சில்) | | |
| 31 | சிவஞான சித்தியார், ஆங்கிலம், ஹிந்தி மொழிபெயர்ப்புக்களுடன் (மறுபதிப்பு அச்சில்) | | |
| 32 | ஷை ஹிந்தி மட்டும் ... | 1 | 0 |
| 33 | திருக்குறள்-அறத்துப்பால் ஹிந்தி மொழிபெயர்ப்பு | 1 | 50 |
| 34 | திருக்குறள்—பொருட்பால் .. ... | 2 | 50 |
| 35 | திருக்குறள்—காமத்துப்பால் .. ... | 1 | 0 |
| | ஷை 33, 34, 35 திருக்குறள் 3 புத்தகமும் சேர்த்து வாங்கினுல் கிரையம் ... | 4 | 0 |
| 36 | திருக்குறள் தமிழ்மறை K. M. வேங்கடராமையா M. A., B. O. L. அவர்கள் குறிப்புரையுடன் ... | 0 | 75 |
| 37 | திருக்குறள்-பொருட்பால் பரிமேலழகர் உரை இலக்கணக் குறிப்பின் விளக்கம் ... | 0 | 13 |
| 38 | முதுமொழி மேல் வைப்பு ... | 0 | 75 |
| 39 | திருவுசாத்தானக் கல்லெழுத்துக்கள் ... | 0 | 37 |
| 40 | திருச்செந்தூர்க் கந்தர் கலிவெண்பா - மதுரை மீனுட்சியம்மை பிள்ளைத் தமிழ் - மதுரைக் கலம்பகம்-நீதிநெறி விளக்கம் - மதுரை மீனுட்சியம்மை இரட்டைமணி மாலை-மதுரை மீனுட்சியம்மை குறம் ... | 2 | 75 |
| 41 | திருவாரூர் நான்மணிமாலை - முத்துக் குமாரசுவாமி பிள்ளைத் தமிழ் ... | 1 | 25 |

ரூ.

| | | | |
|---|---|---|---|
| 42 | சிதம்பர மும்மணிக்கோவை-சிதம்பரச் செய்யுட்கோவை-தில்லைச்சிவகாமியம்மை இரட்டைமணிமாலை | ... | 1 |
| 43 | பண்டார மும்மணிக் கோவை-காசிக் கலம்பகம்-சகலகலாவல்லி மாலை | ... | 1 |
| 44 | சிதம்பரச் செய்யுட்கோவை | ... | 0 |
| 45 | முத்துக்குமாரசுவாமி பிள்ளைத்தமிழ் | ... | 1 |
| 46 | தமிழிசைப்பாக்கள் | ... | 0 |
| 47 | பெரியபுராணம் உரைநடை | ... | 2 |
| 48 | திருவிளையாடற் புராணம் (உரை நடை) | ... | 2 |
| 49 | குமரகுருபர சுவாமிகள் ஜீவிய சரித்திரப்பட விளக்கம் | | 0 |
| 50 | அபிராமி பட்டர் பிரபந்தம் | ... | 0 |
| 51 | திருக்கயிலைத் திருமுறை | ... | 0 |
| 52 | திருக்கடவூர்த் திருமுறையும் பிரபந்தங்களும் | ... | 0 |

மேலேகண்ட நூல்கள் கிடைக்குமிடங்கள் :-

1. ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் கலைக்கோவில், ஸ்ரீவைகுண்ட

2. ஸ்ரீ K. சுப்பிரமணிய அய்யர் அவர்கள்,
" தியாகராஜ விலாசம் "
53, பிள்ளையார் கோவில் தெரு, திருவட்டீஸ்வரன்பேட்டை,
திருவல்லிக்கேணி, சென்னை.

3. பன்னிரு திருமுறை மன்றம், தெற்கு ஆடி வீதி, மதுரை

குறிப்பு:- சைவ விற்பனைத் தொகை
'குமரகுருபரன்' பத்திரிகையைச் சாரும்.

குமரகுருபரன் அச்சகம், ஸ்ரீவைகுண்டம்.